16000த்துக்கும் மேற்பட்ட செய்திகளைக் கொண்டிருக்கின்ற உங்கள் காபியில் பாதிமா அவர்களுக்கு ஒரு ஹதீஸேனும் இல்லை. இதுதான் நீங்கள் அஹ்லுல்பைத்தை நேசிப்பதன் இலட்சணம்.

**04)** அலிﷺ, பாதிமா, ஹஸன்ﷺ, ஹுஸைன்ﷺ போன்றவர்களின் பரம்பரையில் வந்தவர்கள்தான் அஹ்லுல்பைத்தினர் என்று நீங்கள் சொல்வதும் அவர்களை நீங்கள் நேசிப்பதாகச் சொல்வதும் உண்மையாக இருந்தால் அவர்கள் பரம்பரையில் வந்த அத்தனை பேருடைய பெயர்களையும் உங்களால் வெளியிட முடியுமா? அவ்வாறு வெளியிட உங்கள் மனது இடம் கொடுக்குமா?

வெளியிடமாட்டீர்கள் வெளியிட்டால் உங்கள் போக்கிரித்தனத்தைப் பார்த்து உலகம் காறி உமிழுமே, ஷைத்தானையும் இப்லீஸையும்விட கெட்டவர்கள், எதிரிகள் என்று நீங்கள் அடையாளப்படுத்தும் அபூபக்ர்ﷺ, உமர்ﷺ போன்ற பெயர்களை அஹ்லுல் பைத்தினர் தங்கள் செல்வக் குழந்தைகளுக்கு சூட்டி அழகுபார்த்தது அம்பலமாகிவிடுமே, இவர்கள் நீங்கள் சொல்வதைப்போன்று அபூபக்ரையும் உமரையும் கடுமையாக எதிர்த்திருந்தால் தாங்கள் எதிர்க்கின்ற இஸ்லாத்தை விட்டும் சென்றுவிட்ட இத்தகையவர்களின் பெயர்களையா தங்கள் பிள்ளைகளுக்கு சூட்டினார்கள் என்று மக்கள் கேட்பார்களே!

இப்படியான சிக்களில் மாட்டிக்கொண்டு தொண்டையில் முள் ̇தைத்தவனைப் போன்று இருக்க நீங்கள் விரும்பமாட்டீர்கள், கிறிஸ்தவர்களைப் போன்று ஹுஸைனின் இரத்தத்தைக் காரணம் காட்டி பலம் சேர்க்க மாத்திரமே உங்களுக்கு திராணியிருக்கிறது.

**05)** மக்களிடம் நீங்கள் எல்லா ஸஹாபாக்களையும் நேசிப்பதாகச் செய்யும் பொய்ப்பிரச்சாரம் உண்மையானதாக இருந்தால், ஹுஸைன் ﷺ அநியாயமான முறையில் கொலை செய்யப்பட்டார் என்பதற்காக விழா கொண்டாடும் நீங்கள் நபியவர்களின் இரண்டு பிள்ளைகளைத் திருமணம் செய்யும் எவரும் பெறாத வாய்ப்பைப்பெற்ற உஸ்மான் ﷺ அவர்கள் அநியாயமான முறையில் கொலைசெய்யப்பட்டதற்கு துக்கம் அனுஷ்டிக்கிறீர்களா? உங்கள் வரலாற்றில் ஹுஸைﷺ அவர்களுக்கு துக்கம் அனுஷ்டிப்பதைப்போன்று ஒரு சதவீதமாவது உஸ்மான் ﷺ அவர்களுக்காக நாம் துக்கம் அனுஷ்டிக்க வேண்டும் என்று சொல்லியிருக்கிறீர்களா?, அவரும் நபியின் மருமகன்தானே! ஆனால் உங்கள் கணக்கில் அவர் நபியின் குடும்பமில்லை.

நாம் எந்தவகையிலும் மூளைக்கும் வாய்க்கும் சம்மந்தமில்லாத ஒரு கொள்கைக்கு அடிமையாகியிருக்கிறோமென்று இப்போதாவது தெரிகிறதா? பல நாட்கள் முற்றுகையிடப்பட்டு தண்ணீர் குடிப்பதற்குக்கூட அனுமதி மறுக்கப்பட்டு குர்ஆனை ஓதிக்கொண்டிருக்கும்போதுதானே உஸ்மான்ﷺ கொலை செய்யப்பட்டார்கள். ஹுஸைன்ﷺ அவர்கள் கூட, பிரச்சினையை தோற்றுவித்து கொலை செய்யப்பட்டார். உஸ்மான்ﷺ பிரச்சினைக்கே போகவில்லையே.

நிச்சயம் நீங்கள் அவ்வாறு துக்கப்படமாட்டீர்கள். அவ்வாறு செய்யுமாறு மற்றவர்களுக்கு சொல்லவுமாட்டீர்கள். கொன்றவர்களே நீங்கள்தானே, நீங்களே கொன்றுவிட்டு நீங்களே துக்கம் கொள்ள முடியாது இல்லையா? ஷீஆக்களைத்தவிர அத்தனைபேரையும் கொல்வதுதானே உங்கள் எதிர்கால இலட்சியம், அப்படி இருக்க அவரின் கொலைக்கு எப்படி நீங்கள் துக்கப்படுவீர்கள் இல்லையென்றால் நபிﷺ அவர்களின் மாமனார் உமர் ﷺ அவர்களைக் கொலை செய்தவனுக்கு உங்கள் ஈரானில் கப்று கட்டி வருடாந்தம் கந்தூரி கொடுத்து அவனுக்காக பிரார்த்திப்பீர்களா? அதை பெருமையோடு வீடியோ காட்சிகளாக பதிவுசெய்து பரப்புவீர்களா?

**06)** அஹ்லுஸ்ஸுன்னா அறிஞர்களிடம் பிரதிசெய்யப்படாத நீங்கள் அறிஞர்கள் என்று கருதுகின்ற உங்கள் அறிஞர்களால் உருவாக்கப்பட்ட ஒரு ஹதீஸ் திறனாய்வுக் கலையை உங்களால் கொண்டுவர முடியுமா? அல்லது உங்களால் சிறந்த அறிவிப்பாளர்கள் என்று கருதப்படும் அறிவிப்பாளர்களில் உங்கள் அறிஞர்கள் சொல்கின்ற விமர்சனங்களை நடைமுறைப்படுத்த முடியுமா? எங்கே நடைமுறைப்படுத்தப்போகிறீர்கள் அப்படி செய்தால் உங்கள் மதத்திற்கே முகவரியில்லாமல் போய்விடுமே!

**07)** உங்களால் முடியுமென்றால் உங்களின் நூல்களிலிருந்து ஒரு பலமான (ஸஹீஹான) ஹதீஸை எடுத்துக்காட்ட முடியுமா?

**08)** உமையா ஆட்சியாளர் நபியின் குடும்பத்தினருக்கு அநியாயம் செய்ததாக அவர்கள் மீது எரிந்து விழுகிறீர்கள். அவர்களை உங்களின் எல்லா மேடைகளிலும் நாக்கூசாமல் தூற்றுகிறீர்கள். பாமர மக்கள், உமையா ஆட்சியாளர்கள் காபிர்கள், தஜ்ஜாலைவிட கொடியவர்கள் என்று நினைக்குமளவுக்கு அவர்களை சித்திரிக்கிறீர்கள். இத்தனைக்கும் உமையா ஆட்சியாளர்கள் அஹ்லுல் பைத்தினருக்கு அநியாயம் செய்ததாக உங்கள் நூல்களிலிருந்து ஒரு பலமான ஆதாரத்தையேனும் உங்களால் காட்ட முடியுமா?

(இது குவைத்தைச்சேர்ந்த அஷ்ஷெய்க் குழைர் அவர்கள் லண்டனில் ஷீஆக்களின் மூத்த அறிஞர்களுடன் நடந்த ஒரு விவாதத்தில் முன் வைத்த சவால் அது இறுதி வரை முறியடிக்கப்படவில்லை. அதனால் அதே சவாலை இங்கு நாம் பிரதி செய்துள்ளோம். இதில் எதையாவது இட்டுக்கட்டிச்சொல்லி மாட்டிக்கொண்டு விழிக்காதீர்கள். அதுதான் உங்களின் பரம்பரைக்குணமாயிற்றே அதனால் சொல்கிறேன்.)

நாம் இங்கு முன்வைத்திருக்கும் அம்சங்களே 'ஷீஆக்களின் கொள்கை போலியானவை' என்பதைப் புலப்படுத்தப் போதுமானவை என்று நினைக்கிறோம். இது உங்களின் மூதாதையர்களால், பெரும் அறிஞர்களால்கூட முறியடிக்கப்படாத சவால்கள். வீணாக நேரத்தைக்கழித்து வீண்போகாதீர்கள் நேரம் பொன்னானது.

ஷீஆக்கொள்கை என்பது யூதர்களின் அபிலாசைகளை நிறைவேற்றுவதற்காக அவர்களால் திட்டமிட்டு உருவாக்கப்பட்டது. பின்பு அதை இஸ்லாம் என்று சிலர் அக்காலத்தில் ஏற்றுக்கொண்டதனால், பிற்பட்ட காலத்தில் வளர்ச்சியடைந்து அரசியல் பலமும், பணபலமும் பெற்றதன் விளைவாக பெரும்பான்மையானவர்களால் புரிந்துகொள்ளப்படாத ஒரு விடயமாக மாறிவிட்டது.

பெரும்பாலும் ஷீஆ அறிஞர்களின் பேச்சுக்களை செவிமடுத்தால் மற்றவர்களை ஏசுவதற்காக கொண்டுவருகின்ற குர்ஆன் வசனங்கள், ஹதீஸ்களைத்தவிர வேறு எதற்கும் அவர்கள் ஆதாரம் சொல்லமாட்டார்கள். வஹீ வந்ததைப்போன்று வாய்க்கு வருவதையெல்லாம் மார்க்கம் என்று சொல்லிக்கொண்டே இருப்பார்கள். ஆதாரங்களைவிட அவர்களின் மனோ இச்சையும், தத்துவமும், மெய்யியலுமே அவர்களின் கொள்கைகளை நிரூபிப்பதற்கு அவர்களுக்கு மிகவும் சிறந்த சாதனம். அல்லாஹ் எம்மனைவரையும் இத்தகைய குழப்பங்களிலிருந்து பாதுகாப்பானாக! ஸஹாபாக்களுடன் சுவர்க்கத்தில் நாம் இருப்பதற்கு அருள்செய்வானாக! ஆமீன்.

நிச்சயமாக அவனே யாவற்றையும் மிகைத்தவனாகவும் மிக்க ஞானமுடையவனுமாக இருக்கிறான்.